உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பாரத தாற்பரிய சங்கிரகம்

உரையுடன்





விகிர்தி — தை — ௩ம்

அசுபதி நாள்

1951.

திருவாவடுதுறை யாதீன வெளியீடு – 37.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவான்

சப்பாபதி நாவலரவர்கள்

மொழிபெயர்த்தியற்றிய

# பாரத தாற்பரிய சங்கிரகம்

உரையுடன்

அவ்வாதீனத்து

இருபதாவது குருமகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்

கட்டளை யிட்டருளியபடி

அவ்வாதீனத்து வித்துவான்

த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்

பரிசோதித்துப் பதிப்பிக்கப் பெற்றது

---

விகிர்தி — தை — ௩௰

அசுபதி நாள்

1951.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குருபூசை வெளியீடு



**ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகள்**

**12–2–51.**



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து
20-வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

---

“கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ”

**ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்.**

பாரத தாற்பரிய சங்கிரகம் என்பது வடமொழியில் ஸ்ரீமத் அப்ப தீக்ஷிதரால் அருளிச்செய்யப்பெற்ற நூலாகும். அதிற் கூறப்படும் செய்தி ஸ்ரீ வியாச முனிவர் தாம் அருளிய மகாபாரதம் ஆகிய இதிகாசத்தில் தொனிவிருத்தியால் சிவபெருமானது பரத்துவத்தை வெளியிட்டுள்ளார் என்பதாம். அந்நூலில் உள்ள சுலோகங்கள் இருபது. அந்நூலுக்கு உரையும் நூலாசிரியரே இயற்றியருளினர் என்ப.

இவ் வரிய நூற்பொருளை வடமொழி பயிலாதவரும் அறிந்துய்ய வேண்டும் என்னும் பெருவிருப்பால் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்திலே சென்ற 50-ஆண்டு

கட்கு முன்பு மகாவித்துவானாக இருந்து விளங்கிய யாழ்ப்பாணத்து வடகோவை, ஸ்ரீ சபாபதி நாவலரவர்கள் எளிய தமிழ் நடையிலே மொழிபெயர்த்து இயற்றியுள்ளார்கள். நாவலரவர்கள் தமது மொழிபெயர்ப்பின் முதற் பதிப்பை சர்வதாரி வருஷம் ஆவணி மாதம் (கி. பி. 1888)-ல் தமது சித்தாந்த வித்தியாநுபாலன யந்திரசாலையில பதித்து வெளியிட்டார்கள்.

அந்த மொழி பெயர்ப்பு நூல் இப்பொழுது கிடைப்பது அரிதாகலான், அது எளிதில் கிடைத்து அனைவரும் படித்துணர வேண்டும் என்று கருணைகொண்டு சித்தாந்த சைவ சமயத்தையும் செந்தமிழ் மொழியையும் வளர்த்து வருவதில் பேரார்வமும் பெருங் கொடையும் காட்டிப் புரந்துவரும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள்** இந்நூலையும் உரையையும் பரிசோதித்து அச்சிட்டுதவுமாறு பெருங்கருணையோடு அடியேனுக்குப் பணித்தருளினார்கள். அவர்களுடைய கட்டளையேவல் என் சிரத்தலையேற்று இந்நூலை உரையுடன் என் அறிவு சென்ற அளவில் பரிசோதித்து இவ்வாதீனத்துப் பிரதம பரமாசாரியராகிய ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகள் திருப்பூசையில் வெளியிட்டுள்ளேன். குணங்கொண்டு கோதாட்டுமாறு பெரியோர்களைப் பிரார்த்திக்கின்றேன்.

திருவாவடுதுறை,
10—2—1951.

சு. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,
ஆதீன வித்துவான்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீ அப்ப தீக்ஷிதர் வரலாற்றுச் சுருக்கம்.

பாரத தாத்பரிய சங்கிரகம் என்னும் நூலையும் அதன் உரையையும் வடமொழியில் செய்து சைவ உலகுக்குத் தந்த பெரியோர் ஸ்ரீ அப்ப தீக்ஷிதர் என்பவர். இவர் பாரத்வாஜ கோத்திரத்தில் தோன்றியவர். சாமவேதி. இவர் தந்தையார் ரெங்கராஜ அத்வரி. பாட்டனார் ஆசாரிய தீக்ஷிதர். அப்ப தீக்ஷிதர் காலம் கி. பி. 1550—1622; 72 வயது வாழ்ந்தவர். வடஆர்க்காடு ஜில்லாவில் உள்ள ஆரணிக்குச் சமீபத்தில் 10 மைல் தூரத்திலுள்ள அடையபலம் என்ற கிராமம் இவர் பிறந்த புண்ணியபூமி. இவருடைய தந்தையாராகிய ரெங்கராஜ அத்வரியினிடமே இவர் கல்வி கற்றுச்சிறந்தார். ஆசாரிய தீக்ஷிதர் விஜய நகரத்து கிருஷ்ண தேவராயரிடம் ஆஸ்தான வித்வானாக இருந்து புகழ்பெற்று விளங்கினார்.

சிவபிரானிடம் சிறந்த பக்தியுடையவர். நீலகண்ட மதப் பிரதிஷ்டா குருவாகிய இவர் வடமொழியில் பல நூல்கள் செய்திருக்கிறார். நரசிம்ம ஆசிரமி என்பவர் தூண்டுதலினால் பரிமளம், நியாயரக்ஷாமணி முதலிய அத்வைத வேதாந்த நூல்களைச் செய்திருக்கின்றாராயினும் சிவ தோத்திரங்களை மிகுதியாகச் செய்துள்ளார். இவர் நூல்களில் சிவமணம் கமழும். சித்தாந்த கௌமுதி என்னும் நூலைச் செய்த ஸ்ரீ பட்டோஜி தீக்ஷிதரும் இவரும் காசியில் சில காலம் சேர்ந்து வசித்தனர். பட்டோஜி தீக்ஷிதர் தாம் செய்த நூல்களில் ஸ்ரீ அப்ப தீக்ஷிதரை ஆசாரியராகவே மதித்துப் போற்றுகிறார். அப்ப தீக்ஷிதர் தமது பரிபூரண காலத்தில் சிதம்பர தலத்துக்கு வந்து சேர்ந்தார். அப்போது சிதம்பரத்தைப்பற்றி இரண்டு சுலோகங்கள் செய்தார். இரண்

டாவது சுலோகம் செய்யும்போதே சிவபரிபூரணம் அடைந்தார் என்ப. அவருக்குப் பதினொரு பிள்ளைகள். இப்பிள்ளைகளும், இளைய சகோதரர் பேரரான நீலகண்ட தீக்ஷிதரும் பரிபூரண காலத்தில் அருகில் இருந்தனர். நீலகண்ட தீக்ஷிதரிடத்து அப்பய தீக்ஷிதர் மிக விருப்புடையவர். இவருடைய சகோதரர் ஆச்சான் தீக்ஷிதர்.

### இவர் செய்தருளிய நூல்கள்

1. வியாகரணம் :—1. நக்ஷத்திர வாதாவளி 2. பிராகிருத சந்திரிகா என்பன.

2 மீமாம்ஸை :— 1. சித்திரபுடம் 2. விதிரசாயனம் 3. சுகோபயோஜனி 4. உபக்கிரம பராக்கிரமம் 5. வாதநக்ஷத்திர மாலா என்பன.

3. வேதாந்தம் :—1. பரிமளம் 2 நியாயரக்ஷாமணி 3. சித்தாந்த லேசம் 4. மத சாரார்த்த சங்கிரகம் 5. சாங்கர சித்தாந்தம் 6. நியாயமஞ்சரி என்பன.

4 நீலகண்ட மதம்:—1. சிவார்க்கமணி தீபிகை 2. இரத்தினத்திரய பரீக்ஷை 3. மணிமாலிகை 4. சிவதத்துவ விவேகம் 5. பிர்ம்ம தர்க்கஸ்தவம் 6. சிவார்ச்சனா சந்திரிகை உதாவுடன் 7. சிவத்தியான பத்ததி 8. ஆதித்திய ஸ்தவ ரத்தினம் 9. சிகரிணிமாலை 10. சிவகர்ணாமிர்தம் 11 இராமாயண தாற்பரிய சங்கிரகம் 12. பாரத தாற்பரிய சங்கிரகம் 13. சிவாத்வைத நிர்ணயம் 14. பஞ்சரத்ன ஸ்தவம் வியாக்கியானத்துடன் 15. சிவானந்த லகரி 16. துர்க்கா சந்திரகலா ஸ்துதி.

5 இராமாநுஜ மதம் :— நியாய மயூக மாலிகை.

6. மத்துவ மதம் :— நியாய முக்தாவலி.

7. அலங்காரம் :—1. குவலயானந்தம் 2. சித்திரமீமாம்சை 3. விருத்தி வார்த்திகம் 4. நாமசங்கிரக மாலா.

8. கண்டனங்கள்: மத்துவமத முகமர்த்தனம் முதலிய பல.

உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# பாரத தாற்பரிய சங்கிரகம்.

### தற்சிறப்புப் பாயிரம்

ஆரி யத்துய ரப்பதீக் கிதன்முன மறைந்த
பார தத்தின்றாற் பரியசங் கிரகத்தைப் பாடற்
சீரி யற்றமி ழாலுரை செயவருள் செய்ய
வீர மும்மதக் குஞ்சரப் பிரானடி விழைவாம்.

இது தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் உணர்த்துகின்றது.

(இதனது பதப்பொருள்) உயர் அப்ப தீக்கிதன் — சிவாத்துவித ஞான சித்தியினால் உயர்வுடையராகிய அப்பய தீக்கித முனிவர், ஆரியத்து அறைந்த — ஆரிய மொழியிலே அருளிச்செய்த, பாரதத்தின் தாற்பரிய சங்கிரகத்தினை — பாரத தாற்பரிய சங்கிரகமென்னு நூலினை, சீர் இயல் தமிழ்ப்பாடலால் உரை செய — அழகு பொருந்திய இயற்றமிழ்ப் பாவினாற் கூறிட, அருள் செய்ய — திருவருள் பாலிக்கும் பொருட்டு, வீர மும்மதக் குஞ்சரப் பிரான் அடி விழைவாம் — வலிபொருந்திய மூன்று மதங்களையுடைய யானைமுக விநாயகப் பிரானுடைய திருவடிகளை தியானஞ் செய்வாம் என்றவாறு.

அப்பயதீக்கித முனிவர் இயற்றிய வடமொழிப் பாரத தாற்பரிய சங்கிரகத்தினைத் தென்மொழிப் பாவினால் உரைக்கத் திருவருள் வழங்க மூத்தபிள்ளையார் திருவடிகளைத் தியானஞ் செய்வாம் என்க.

## நூல்

உலகளந்த மாயனவ தார மாகி
யுற்பவித்த வியாதமுனி பாண்டு மைந்தர்
பலமுறுநற் கதைதெரிக்கும் வியாச வாற்றாற்
பங்கயக்கண் மாலையதி கரித்துச் செய்த
அலகில்வர னுறுபார தத்தி னாண்டாண்
டவனித்த மருச்சிக்கப் படுதி யென்று
நிலவுவளர் சடைப்பகவ கூறுமுகத் தானீ
நித்தியதத் துவமென்று விளக்கி னானால்.

இது கண்ணபிரான் சிவபிரானைப் பூசித்துய்ந்தமை கூறுகின்றது.

(இ-ள்) நிலவு வளர் சடைப் பகவ—பிறை வளர்தற்கிடமாகிய சடையினையுடைய பகவனே, உலகு அளந்த மாயன் அவதாரம் ஆகி உற்பவித்த வியாதமுனி — உலகத்தினை அளந்த திருமாலின் அவதார விசேடராய்த் தோன்றிய வியாச முனிவர், பாண்டு மைந்தர் பலம் உறு நல் கதை தெரிக்கும் வியாச ஆற்றால் — பாண்டு புத்திரர்களுடைய பயன் மிக்க நல்ல சரித்திரத்தினை அறிவிக்குங் கபட நெறியினால், பங்கயக்கண் மாலை அதிகரித்துச் செய்த — செந்தாமரை மலர் போலுங் கண்களையுடைய கண்ணபிரானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றிய, அலகில் வரன் உறு பாரதத்தில் — அளவில்



லாத மகிமை பொருந்திய மாபாரதமென்னும் இதிகாசத்தில், ஆண்டு ஆண்டு — அங்கங்கே, அவன் நித்தம் அருச்சிக்கப் படுதி யென்று கூறு முகத்தால்—அக்கண்ண பிரான் நித்தியமும் பூசிக்கப்படுகின்றாயென்று சொல்லும் வாயிலால், நீ நித்திய தத்துவம் என்று விளக்கினான் — நீயே நித்தியமாயுள்ள பரதத்துவமென்று புலப்படுத்தினார். (எ—று)

நித்திய தத்துவம் வடநூன் முடிபு. தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது. ஆல் — அசை.

வியாச முனிவர் பாண்டவர் சரித்திரங் கூறுவார் போன்று கண்ணபிரான் மகிமை விளங்க இயற்றிய மாபாரதத்தில் அக்கண்ணபிரான் சிவபிரானைப் பூசித்த வரலாறு கூறுமுகத்தானே சிவபிரானே பூசிக்கற்பாலனாகியுள்ள பரதத்துவமென்பதை வெளியிட்டாரென்க.

பிரமாதி சகலசக மோகத் தானே
பிணிப்புண்டங் கவமானப் பட்ட தென்றும்
பரமேச பகவநீ தானே யற்றாற்
பட்டிலைமற் றஃதென்று முனிவி யாதன்
தவரீச மங்கணிகன் றனாது காதைச்
சம்பந்தத் தாலினிது விளக்கிக் கூறி
உவமானங் கடந்தபரப் பிரம நீயென்
றுணர்த்திடவு மூர்க்கர்பிணங் குறுவ ரந்தோ.

இது சிவபிரான் இயல்பாகவே மோக வினையினீங்கி விளங்கும் ஏக முதலாயுள்ள பரப்பிரமப் பொருளென்பது கூறுகின்றது.

(இ-ள்) பரமேச பகவ! — பரமேசனாகிய பகவனே! முனி வியாதன் — வியாச முனிவர், அங்கு — வேள்விக் களத்து, பிரமாதி சகல சகம் மோகத்தானே பிணிப்பு உண்டு அவமானப் பட்டது என்றும் — பிரமனை முதலாக வுடைய தேவர் தொகுதி மயக்கத்திற் றடக்குற்று அவ மதிப்பினை எய்திற்றென்றும், நீ தானே மற்று அஃது பட்டிலை என்றும் — நீ யொருவன் றானே ஆண்டு அம் மோகத்தினை உற்றிலை யென்றும், தவர் ஈச மங்கணிகன் றனது காதைச் சம்பந்தத்தால் இனிது விளக்கிக் கூறி — தவத்தர்க்குத் தலைவனாகிய மங்கணிகனது சரித்திர இயைபு பற்றி நன்கு தெளித்துச் சொல்லி, உவமானம் கடந்த பரப்பிரமம் நீ என்று உணர்த்திடவும் — ஒப்பில் லாத பரப்பிரமப் பொருள் நீயே யென்று பாரதத்தில் அறிவுறுத்திடவும், அந்தோ மூர்க்கர் பிணங்குறுவர் — அச்சோ! மூர்க்கர் உன் பரத்துவந் தேறமாட்டாது பிறந்திறந்து உழிதர்கிற்கும் தேவரைப் பரமென்று மாறுடுவர். (எ—று).

பிரமாதி — அன்மொழித்தொகை. அது சகலசகம் என்பதனோடு தொக்கு இருபெயரொட்டாய் நின்றது. அன்மொழித் தொகைப் பொருளாய் நின்ற தேவரென்னும் உயர்திணை தோன்றி யொடுங்கி வரும் பொருளென்று கருதப்பட்டமையின் அஃறிணையாயிற்று. சகலசகம் தொகுதியென ஒருமையுணர்த்தலின் பட்ட தென ஒன்றறி சொல்லின் வினையான் முடிந்தது. தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது. பாரதத்தில் என்பது அதிகாரத்தான் வந்தது, இது முன்னுங் கொள்க.

அயனை முதலாகவுடைய தேவரெல்லாம் மங்கணிகன் மாயையிற் கட்டுற்றுமுழுதலானும் சிவபிரான் அத் துடக்குறாமல் மோக நீக்கி அறிவு அருளுதலானும்



அவனே பரப்பிரமப் பொருளாவனென்று வியாச முனிவர் பாரதத்திற் கூறுதல் கேட்டுவைத்தும் உண்மை தேறாது பிணங்கும் நீரரைத் தெருட்டும் வாயில் இல்லை யென்க. (2)

முற்கிளந்த பிரமாதி மோக வாழி
மூழ்கிடநீ யதுமூழ்கா விசேடத் தானே
யுற்பவமே யிருப்பிறப்புற் றார்க ளன்னோ
ருவர்க்குமுதற் காரணமா யுயர்வொப் பில்லாத்
தற்பரவுத் தமமான பொருணீ யென்னுஞ்
சங்கைபிறத் துவஞானந் தலைப்பட் டானென்
றற்புதமங் கணிகன்வாக் கதனான் வாத
ராயணன்றேற் றெனவெளியிட் டருளி னானால்.

இதுவுமது.

(இ-ள்) வாதராயணன் — வியாச முனிவர், முன் கிளந்த பிரமாதி மோக ஆழி மூழ்கிட — முன்னர்க்கூறிய பிரமனை முதலாகவுடைய தேவர் மையற்கடலிலே முழுக, நீ அது மூழ்கா விசேடத்தான் — நீ அத்துடக்கெய்யாத மேம்பாட்டினால், அன்னோர் உற்பவம் இருப்பு இறப்பு உற்றார்கள் — அவரெல்லாம் தோற்றம் நிலை இறுதி யென்னும் உபாதி மூன்றினையும் உறுநிற்கும் பசுக்களா வர், உவர்க்கு முதற் காரணமாய் உயர்வு ஒப்பு இல்லாத் தற்பர உத்தமம் ஆன பொருள் நீ என்னும் — உவர்க் கெல்லாம் பரம காரணனாய் உயர்வொப்பின்றி விளங்கும் பசுபதியாகிய தனி முதற்பொருள் நீயே யென்கின்ற, சங்கையில் தத்துவ ஞானம் தலைப்பட்டான் என்று — ஐயப்பாடில்லாத உண்மையறிவை மங்கணிகன் எய்தினா னென்று, மங்கணிகன் அற்புத வாக்கதனால் — அம்

மங்கணிகன் ஞானத்துதியினால், தெற்றென வெளியிட்டருளினன் — பாரதத்தில் தெளிவாகப் புலப்படுத்தினார் (எ—று.)

பிரமாதி — அன்மொழித்தொகை. தொகையோடு முற்றும்மையும், தேற்றேகாரமும் விகாரத்தாற்றொக்கன. உற்றார்களென்பது காலவழுவமைதி. ஏகாரம் முன்னது இசை நிறை; பின்னது எண். ஆல் — அசை.

மையற்கடற் படிதலின் அயன் முதலிய தேவரெல்லாம் பிறந்திறந்து வரும் பசுக்கள்; அஃதெய்தாமையிற் சிவபிரானே பசுபதி என்று மங்கணிகன் மெய்யுணர்ந்தானென்று பாரதத்தில் வியாச முனிவர் தங்கருத்தைத் தெற்றென வெளியிட்டாரென்க. (3)

கண்ணனருச் சுனனிருவர் கயிலை நண்ணிக்
கருத்தனினைத் தரிசித்துப் பிரம பாவ
நண்ணிநிறை சிவானந்த வெள்ள மூழ்கி
நாடுபிற சம்பந்த மின்றி யிற்றென்
றெண்ணரிய பிரமசம் பந்த மாகி
யிலகுதரு மங்களெலா முடைய நின்மாட்
டண்ணறடத் தச்சோருபப் பிரமவிலக் கணங்க
ளாயிரண்டுங் கூறிற்றை வியாதமுனி யறைந்தான்.

இது கண்ணபிரானும் அருச்சுனனும் திருக்கயிலாயத்தினை அடைந்து சிவபிரானைத் தரிசித்துப் பிரம தியான முற்று உய்ந்தவாறு கூறுகின்றது.

(இ—ள்) அண்ணல் — இறைவனே, வியாதமுனி — வியாசமுனிவர், கண்ணன் அருச்சுனன் இருவர் — கண்ணபிரான் அருச்சுனனென்னு மிருவரும், கயிலை



நண்ணி — கயிலையையடைந்து, கருத்தன் நினைத்தரிசித்து — பரம காரணனாகிய நின்னைத் தரிசித்து, பிரமபாவம் நண்ணி — பிரம பாவனை யுற்று, நிறை சிவானந்த வெள்ளம் மூழ்கி — தம்முட்டோன்றி நிறைகின்ற சிவானந்த வெள்ளத்திற் படிந்து, நாடு பிற சம்பந்தம் அன்றி — ஆராய்ந்து நீக்கப்படும் பொது வியல்பிற்கு வேறாய், இற்று என்று எண் அரிய பிரம சம்பந்தம் ஆகி — இன்ன வியல்பிற்றென்று சிந்தித்தற் கரிய பிரம சமவாயமாய், இலகு தருமங்கள் எல்லாம் உடைய நின் மாட்டு — விளங்குகின்ற சிறப்பியல்பும் முற்றறிவு முடைய நினக்கு, பிரம தடத்தச் சொரூப இலக்கணங்கள் ஆயிரண்டும் கூறிற்றை — பிரமத்தின் பொதுச் சிறப்பிலக்கணங்களிரண்டினையும் அணியாகக் கூறியதனை, அறைந்தான் — பாரதத்தில் உரைத்தார். (எ—று).

உம்மை விகாரத்தாற் றொக்கது. பிறசம்பந்தம் பொது வியல்பு. பிரமமென முன் வருதலின், பிறவெனப்பட்டன பசு பாசங்களாம். பிற சம்பந்தமுடைய பொது வியல்பினைப் பிறசம்பந்த மென்றது உபசாரம். பிரம சம்பந்தமாகி இலகு தருமம் பிரமதாதான்மிய குணமாகும் சிறப்பியல்பு. அதுதான் முற்றறிவு முதலாகப் பல பெற்றியாய் விளங்கலின், எல்லாமென்று பன்மையாற் கூறப்பட்டது. சம்பந்தம் ஈண்டுச் சமவாய மென்னும் பொருட்டு. எண் முதனிலைத் தொழிற்பெயர். நின் மாட்டென்பது வேற்றுமை மயக்கம். செய்யுளாகலின் ஆயிரண்டுமெனச் சுட்டு நீண்டது. இரண்டாவது விகாரத்தாற் றொக்கது. வரையறையின்மையின் ஈண்டு யகர வுடம்படு மெய்யாயிற்று. கூறிற்று வினைப்பெயர்.

கண்ணபிரானும் அருச்சுனனும் கயிலை எய்திச் சிவபிரான் பிரமமாதல் தெளிந்து சிவானந்த வனுபூதி

கூடி இரு வகைப் பிரம இலக்கணங்களும் சிவபிரானுக்குரியனவென்னுந் துதி கூறி உய்ந்தாரென்று வியாசர் பாரதத்தில் உரைத்தாரென்க. (4)

நாரணன்று னெடுங்கால முபாசித் துன்னை
நல்லருளாற் சிவோகம்பா வனைதலைப் பட்டத்தா
லாரணங்கண் முறையிடுமப் பிரம மாகு
மத்துவித நிலைசெவ்வே யடைந்தா னென்றுங்
காரணங்கற் பனைகடந்த பொருணீ யென்னுங்
கருத்துடைய துதியன்றே னன் சொற்று னென்றும்
பூரணனு யுயிர்க்குயிராய் நிற்குமுழு முதலே
புகன்றிட்டான் வியாதமுனிபா ரதத்திற் றனே.

இது நாராயணமூர்த்தி சிவபிரானை உபாசித்துப் பிரமஞானம் எய்தினமை கூறுகின்றது.

(இ—ள்) பூரணனுய் உயிர்க்குயிராய் நிற்கும் முழுமுதலே — பரிபூரணப் பொருளாயும் உயிர்களிடத்து அந்தரியாமியாயும் விளங்கும் முழுமுதற் கடவுளே, வியாதமுனி — வியாச முனிவர், நாரணன்தான் உன்னை நெடுங்காலம் உபாசித்து — நாராயணமூர்த்தி உன்னை நீண்டகாலமாக உபாசனை செய்து, நல்லருளால் சிவோகம் பாவனை தலைப்பட்டு — உன்னுடைய நல்ல அனுக்கிரகத்தினுலே சிவோகம் பாவனையைப் பொருந்தி, அத்தால் ஆரணங்கள் முறையிடும் அப்பிரமம் ஆகும் அத்துவித நிலை செவ்வே அடைந்தான் என்றும் — அதனுல் வேதங்கள் ஏக்கற்றுரைக்கும் அந்தப் பிரமத்தன்மை கைவருதற்கு ஏதுவாகும் இரண்டற்ற சமாதிநிலையைச் செவ்வையாகப் பெற்றுனென்றும், அன்றேன் காரணங் கற்பனை கடந்த பொருள் நீ என்னும் கருத்து உடைய துதி சொற்றுன் என்றும் — அந் நாராயணமூர்த்தி தனக்கொரு நிமித்தமும் உபாதியும் இல்லாத பிரமப்பொருள் நீயே யென்னும் தாற்பரியத்தினைக்கொண்ட தோத்திரத்தினை அக்காலை உரைத்தானென்றும், பாரதத்தில் புகன்றிட்டான் — மாபாரதத்தில் ஓதினுர். (எ—று).

தான் கட்டுரைச் சுவைபட நின்ற அசைநிலை. அதனுவென்புழி அன் சாரியையும், நீயே யென்புழித் தேற்றேகாரமும் விகாரத்தாற் றொக்கன. தானும், ஏயும் அசை நிலைகள்.

நாராயணமூர்த்தி பிரமஞானம் பெறல்வேண்டி மைந்நாகத்திற் சிவபிரானைக் குறித்து அருந்தவமிருந்து அச்சிவபிரான் றிருவருளினுல் பிரமஞான நிட்டை பொய்தப் பெற்றவாறும், அக்காலையிற் காரணங் கற்பனை கடந்த பிரமப்பொருள் சிவபிரானே யென்னுந் துதி சொற்றவாறும், வியாசமுனிவர் பாரதத்தில் உரைத்தாரென்க. (5)

தருமனெரு தாருவாச் சகோதாராம் வீரர்
சாகாதி பிறவுமப்பாப் பசுநிரைகள் புரந்த
கருநெடுமோல் பிரமமே பிராமணர்க ளின்னேர்
காழ்ப்பறுவே சாப்புனைந்து கட்டுரைத்த விடத்தே
அரயரவ ரைவர்க்கு மிடரகற்றி யென்று
மளிக்குமருட் பெருங்கடலே யறிவே நிற்குப்
பிரமபா வம்முண்மை பாரதத்தில் வாற்றுற்
பிரகடனஞ் செய்திட்டான் வியாதமா முனியே.

இது பிரமசத்தம் சிவபிரானுக்குரிய பெயராதல் கூறுகின்றது.

(இ—ள்) அரயர் அவர் ஐவர்க்கும் இடர் அகற்றி என்றும் அளிக்கும் அருட்பெருங் கடலே அறிவே — குருகுல வேந்தராகிய பாண்டவர் ஐவர்க்கும் துன்பங்களை நீக்கி எக்காலமும் அருள்வழங்கும் பெரிய காருண்ணிய சமுத்திரமே ஞான சொரூபியே, வியாதமாமுனி — வியாசமாமுனிவர், பாரதத்து — பாரதத்தில், தருமன் ஒரு தாருவா — தருமபுத்திரனை ஒரு மரமாகவும், சகோதரர் ஆம் வீரர் சாகாதி பிற உறுப்பா — சகோதரர்களாகிய வீரர்களைச் சாகை முதலிய மற்றை அவயவங்களாகவும், பசுநிரைகள் புரந்த கருநெடுமால் பிரமமே பிராமணர்கள் இன்னோர் காழ்ப்பு உறு வேரா — பசுக் கூட்டத்தினைக் காத்த பெரிய கண்ணபிரானையும் பிரமத்தினையும் பிராமணர்களையும் வயிரம் பொருந்திய மூலமாகவும், புனைந்து கட்டுரைத்த விடத்து — அலங்கரித்து யாத்தெடுத்துக் கூறியவழி, இவ்வாற்றால் பிரம பாவம் நிற்கு உண்மை பிரகடனஞ் செய்திட்டான் — இம்முறையான பிரமசத்தப் பொருளா முறை உனக்கு உண்மையை வெளியிட்டார். (எ—று).

அவர் பகுதிப் பொருள் விகுதி, ஐ யுருபுகள் விகாரத்தாற் றொக்கன. ஆக வென்னுஞ் செயவெனெச்சம் ஈறு திரிந்து நின்றது. மகரம் சந்தம் நோக்கி வந்தது. ஏகாரம் முதலது எண், இடையது இசைநிறை, இறுதியது அசைநிலை.

வியாசமுனிவர் மாபாரதத்தில் பிரமசத்தத்தினைச் சிவபரமாக ஓது முகத்தினால் அஃது சிவபிரானை உணர்த்து நாம மாதலை இனிது புலப்படுத்தினா ரென்க.

(6)



## வேறு

அயனரி யரனெனுங் கடவுளர்
மூவரு மாக்க லாதி
யுயறருந் தொழில்களுக் குரியரா
குவருவர்க் குவைகண் மூன்று
மயலறீஇ யுயவுன திச்சையான்
மருவல்சூ சித்து வஞ்சக்
கயவருக் கறியொணாப் பிரமநீ
யென்னவுங் கழறி னானால்.

இது சிவபிரான் திரிமூர்த்திகளையுந் தொழிற்படுத்துந் துரிய மூர்த்தியாதல் கூறுகின்றது.

(இ—ள்) அயன் அரி அரன் எனும் கடவுளர் மூவரும் உயல் தரும் ஆக்கல் ஆதி தொழில்களுக்கு உரியர் ஆகுவர் — அயனும் அரியும் அரனு மென்னு மூவரும் உய்தியைப் பயக்கும் ஆக்கல் காத்தல் அழித்தலென்னுந் தொழில் மூன்றிற்கும் முறையே அதிகாரிகளாவர், மயல் அறீஇ உய — அவத்தையின் நீங்கி உய்யும்பொருட்டு, உவர்க்கு உவைகள் மூன்றும் உனது இச்சையால் மருவல் சூசித்து — அம்மூவர்க்கும் அம்முத்தொழிலும் உனது ஆணையால் நிகழுதலை விளங்கத் தெரிக்குமுகத்தால், கயவருக்கு அறியொணாப் பிரமம் நீ என்னவும் கழறினான் — பொறியிலார் தேறற் கரிய பிரமப்பொருள் நீயே யென்றும் பாரதத்திற் கட்டுரைத்தார் வியாசமுனிவர். (எ—று).

தொகையொடு முற்றும்மையும், தேற்றேகாரமும் விகாரத்தாற் றொக்கன. எழுவாய் மேலைச் செய்யுளி னின்றும் வருவிக்கப்பட்டது. ஆல் — அசை.

முத்தொழில் செய்து போதரும் அயன் முதலிய மூவர்க்கும் அம் முத்தொழில் செய்து மயல் ஒழித்தலால் சிவபிரானே துரிய மூர்த்தியான பிரமப் பொருளா மென்று வியாச முனிவர் பாரதத்திற் கட்டுரைத்தார் என்க. (7)

## வேறு

பிரமன்மா லிருவரினுந் தாழ்மையுனக்
குண்டென்று பிதற்றும் புந்தி
யிரியவொரு தலைதுரப்ப பிரமசுதன்
விசாலாக்கன் றாணு வென்று
அரிகுரோ தத்துதித்த சங்கார
வுருத்திரனென் றறையும் பேர்கள்
கருதரிய நாதவுன தமிசஞா
பகக்கன்றே கழறப் பட்ட.

இது அமிச வுருத்திர நாமங்களை வரைசெய்துணர்த்தி அவர் செய்தி சிவபிரானை எய்தா வென்கின்றது.

(இ—ள்) கருதரிய நாத — இன்ன வியல்புடையை யென்று சுட்டி யுணர்தற்கரிய முதல்வனே, பிரமசுதன் விசாலாக்கன் தாணு அரி குரோதத்து உதித்த சங்கார உருத்திரன் என்று அறையும் பேர்கள் — பிரமசுதனும் விசாலாக்கனும் தாணுவும் அரியின் வெகுளிக் காலைத் தோன்றிய சங்கார வுருத்திரனு மென்று சொல்லப்படும்



நாமங்கள், பிரமன் மால் இருவரினும் உனக்குத் தாழ்மை உண்டென்று பிதற்றும் புந்தி இரிய ஒருதலை துரப்ப — அயன் அரி இருவரினும் உனக்குக் கீழாந் தன்மை உண்டென்று அறிவில்லார் பிதற்றுதற் கேதுவாகும் மயக்க வுணர்வு ஒழியும்படி அதனை ஒருதலையாகத் துரப்பனவாம், உனது அமிச ஞாபகத் துக்கு அன்றே கழறப்பட்ட — அந் நாமங்கள் உன் னுடைய விபூதி உருத்திரர்களை வரைசெய் துணர்த்தும் பொருட்டுப் பண்டே பாரதத்திற் கூறப்பட்டனவாம். (எ—று).

செயப்படு பொருளும் எழுவாயும் வருவித்துரைக்கப் பட்டன. என்று வென்பது எண்ணிடைச் சொல். ஞாபகத்துக்கு என்பது விகாரம், ஏகாரம் தேற்றம்.

பிரமசுதன் விசாலாக்கன் தாணு சங்கார வுருத்திர னென்னும் பெயர்களாற் கூறப்படுவார் விபூதி உருத்திரர்களாதலின் அவர் செயல்கள் பற்றிச் சிவ பிரானுக்கு வரக்கடவதோர் இகழ்ச்சி இல்லை யென்க.

அற்றேல், அப் பெயர்களின்றி வரும் குறைவுடைச் செயல்கள் யாவரைச் சார்ப வெனின், அஃதுணர்த்தற் கன்றே வருஞ் செய்யுள் எழுந்த தென்பது. (8)

## வேறு

யாண்டுனது விபூதியுருத் திரதரும மான
ஞாபகமாம் பொருட்டுரைத்த விசேடபத மின்றே
ஆண்டிழிபி னவைசொருபத் தலைமைபோ திக்கு
மனேகபிர மாணத்திற் றேடமடை தலின்றற்

றீண்டலுறா சருவேச னாகியுயர் நின்னைத்
திசைமுகனு மாறானுந் தெருமரமுன் னொருநாள்
நீண்டதழற் பிழம்பாகி மறைந்து மன்று
ணிமலவறி வினர்க்குவெளி நின்றபெருஞ் சோதீ.

இது விமலராகிய சிவபிரானைக் குற்றச் செய்தி சாரமாட்டா வென்று நிரூபிக்கின்றது.

(இ-ள்) திசை முகனும் மால்தானும் தெருமர முன் ஒருநாள் நீண்ட தழற் பிழம்பாகி மறைந்தும் — சதுர் முகனும் திருமாலும் மயங்கப் பண்டொரு ஞான்று உயர்ந்ததோர் அங்கி வடிவாய் ஒளித்தும், நிமல அறிவினர்க்கு வெளிநின்ற பெருஞ்சோதீ — குற்ற நீங்கிய மெய்யறிவுடைய பக்குவர் பொருட்டுச் சிற்சபையிலே தாண்டவத் திருமேனிகொண்டு திரோதான நீங்க நின்றருளும் அருட்பெருஞ் சோதியே, யாண்டு உனது விபூதி உருத்திர தருமமான ஞாபகம் ஆம் பொருட்டு உரைத்த விசேடபதம் இன்றே — எவ்விடத்தில் உன்னுடைய அமிச உருத்திரர் தருமங்களானவை ஞாபகமாகும் பொருட்டு உரைத்தன வென்று மேற் கூறப்பட்ட நாமங்கள் பிரயோகிக்கப் பட்டிலவோ, ஆண்டு — அவ்விடத்து, இழிபினவை — குற்றச் செய்திகள், சொரூபத் தன்மை போதிக்கும் அனேக பிரமாணத்தில் தோடம் அடைதலினால் — உனது சொரூப முதன்மையை அறிவிக்கும் எண்ணிறந்த சுருதிப் பிரமாணங்களில் குற்ற முண்டாகலின், சருவேசனாகி உயர் நின்னைத் தீண்டல் உறா — அனைத்தையும் ஆளு நாயகனாய் மேம்பட்டு விளங்கும் பரமசிவனாகிய வுன்னைச் சாரமாட்டா, உன்னுடைய விபூதி உருத்திரர் தம்மையே சாருவனவாம். (எ—று).



உன்னுடைய விபூதி உருத்திரர் தம்மையே சாருவனவா மென்பது குறிப்பெச்சம். ஆயின வென்பதில் காலவெழுத்து முதல் குறைந்து நின்றது. ஓகாரந் தெரிநிலை.

இயல்பாகவே குற்றத்தினீங்கி விளங்கும் பரம்பொருளென்று வேதாகமங்கள் கூறும் சிவபிரானைக் குற்றச் செய்தி சாருமென்றல் அமையாமையின், அன்ன வினையுழப்புக்கள் முன் சொன்ன விபூதி உருத்திரர் தம்மையே சார்வனவா மென்க.

அற்றேல், பாரதத்துட் போந்த கீதையில் கண்ணபிரான் தனக்குப் பரத்துவ சித்தி மிகுத்தெடுத்தோதிய தென்னை யெனின்.— அவ்வாசங்கையை ஒழித்தற் கன்றே எழுந்தன வருஞ் செய்யுட்க ளென்பது. (௪)

வேறு

கீதையி லுனக்குப் பரத்துவம் வெளியா
னன்றிநற் கீதத்திற் பிரிய
நாதனே கூட நெறியினாற் கண்ண
னவின்றிடப் பட்டதாங் கதன்றே
மேதையின் வலியோன் பார்த்தன்றான்
றெளிய விளங்குறக் கீதையி னருத்த
மாதர வதனான் மறுவலுங் கண்ண
னனுகீ தையாகவே யறைந்தான்.

இது பாரதத்துட் போந்த கீதையில் சிவபரத்துவம் உள்ளுறையாக உரைக்கப்பட்டவாறு கூறுகின்றது.

(இ—ள்) கீதத்தில் பிரிய நாதனே — கீதப்பிரியராகிய பிரானே, கீதையில்-பாரதத்துட் போந்த கீதையின்

கண்ணே, உனக்குப் பரத்துவம் வெளியானன்றிக் கூட நெறியினால் கண்ணன் நவின்றிடப்பட்டது — உனது பரத்துவமானது வெளிப்படையானன்றி உன்னுறை யாலே கண்ணபிரானாற் சொல்லப்பட்டது, அதன்றே — அதனாலன்றே. மேதையின் வலியோன் பார்த்தன் தான் தெளிய — அறிவினாற்றலையுடையனாகிய பார்த்தன் தெளியும பொருட்டு, விளங்கு உருக்கீதையின் அருத்தம் — அவற்குத் தெளிவுகாட்சி யாகாத அதன் பொருளை வாங்கி, கண்ணன் ஆதரவதனான் மறுவலும் அநுகீதை யாக அறைந்தான் — அக் கண்ணபிரான் அருச்சுனன் மாட்டுந் தனக்குள தாய பேரன்பினால் மறித்தும் அநுகீதையாகப் புனைந்து ஓதுவானாயிற்று. (எ—று).

உனக்குப் பரத்துவம் கூடநெறியினால் உரைக்கப் பட்ட தென்பதனை யானைக்குக் கோடு கூரிதென்பது போலக் கொள்க. இது, "இதனினிற்றிது வென்னுங் கிளவியும்" என்னுஞ் சூத்திரவிதி. ஆங்க வென்னுங் கட்டுரை அசைநிலை ஈறு திரிந்து நின்றது. அதனாலன்றே என்னும் அன் சாரியையும் மூன்றுருவதும் விகாரத்தாற் றொக்கன. அன்றீற் றேகாரம் ஈண்டுத் தெளிவு பொருட்டாய் நின்றது. தெளிய வென்னுஞ் செயவெ னெச்சங் காரியப் பொருளில் வந்தது. பின் வந்த கீதை சுட்டுப்பொருட்டு. வாங்கி யென்பது சொல்லெச்சம். அது பகுதிப் பொருள் விகுதி. ஏகாரம் அசைநிலை. ஆக்கம் விரித்துரைக்கப் பட்டது.

கண்ணபிரான் கீதையிற் சிவபரத்துவம் உன்னுறுத்து ஓதுதலின், அருச்சுனன் உண்மை காண மாட்டாமல் ஐயுற்றுக் கடாவின னாக, கண்ணபிரான் அவனுக்குத் தெளிவு போதர அதன் பொருளை வாங்கி அநுகீதையாக மறுவலும் புனைந்து உரைத்து மலைவு தீர்த்தா னென்க.

(10)



ஆதியாம் புருடன் றனைச்சர ணாக
வடைகின்றேன் யானெனக் கண்ணன்
ஓதிய தானு மேலாகிய மிக்கு
முவமையில் பரம்பொரு ளாகு
காதனு மீசன் றனைப்பர முத்திப்
பெரும்பயன் றலைப்பட நனிநீ
காதலா வடைதி யெனவருச் சுனற்குக்
கட்டுரைத் திடுதலி னானும்.

வீறுசா லறிவிற் பார்த்தற்குத் தன்போன்
மீடலி லானந்த முத்திப்
பேறறக் கண்ணன் றனக்குபா சிக்கத்
தகும்பிற னொருபதி யுண்மை
தேறுணர் வாயிற் றுண்டுமேற் றியானு
ருள்ளத்துஞ் சிவனுவ லென்று
கூறலிற் கண்ணன் கவர்த்தோரா சங்கை
குறுகிய தனையனுக் கம்மா.

இவை இரண்டும் ஒரு தொடர்.

இவை கீதார்த்தத்தில் அருச்சுனனுக்கு ஐயவுணர்வு யாங்ஙனம் நிகழ்ந்த தென்னுங் கடாவை யாசங்கித்து இறை கூறுகின்றன.

---

(இ—ள்) கண்ணன் யான் ஆதி ஆம் புருடன் தனைச் சரணாக அடைகின்றேன் என ஓதியதானும் — கண்ண பிரான் நான் பரமுத்திப் பெரும்பயனை அடையும்

பொருட்டு ஆதியாயுள்ள புருடனைச் சரணாக அடைகின்றேன் என்று கூறியது பற்றியும், நீ பரமுத்திப் பெரும் பயன் நனி தலைப்பட எல்லாம் நியமிக்கும் உவமை இல் பரம்பொருள் ஆகும் நாதன் ஆம் ஈசன் தனைக் காதலால் அடைதி என அருச்சுனற்குக் கட்டுரைத்திடுதலினானும் — நீயும் பரமுத்திப் பெரும் பயனை மிக வெய்தற் பொருட்டு எல்லாவற்றையும் நியமிக்கும் ஒப்பில்லாத பரம் பொருளாகியும் பசுபதியாகியும் உள்ள ஈசனை அன்பினாற் சரணாக அடைக வென்று அருச்சுனனுக்கு யாப்புறுத் தோதல் பற்றியும், வீறுசால் அறிவிற் பார்த்தற்கு — பெருமை சான்ற அறிவினையுடைய அப் பார்த்தனுக்கு, தன்போல் — தன்னைப்போல, மீள்தல் இல் ஆனந்த முத்திப்பேறு உற — மீண்டு வராத வீட்டின்பமாகிய பேற்றினை யெய்தும் பொருட்டு, கண்ணன் தனக்கு உபாசிக்கத் தகும் பிறன் ஒரு பதி உண்மை — கண்ண பிரானா லுபாசிக்கத் தக்க மற்றொரு தலைவன் உளனாதல், தேறு உணர்வு ஆயிற்று — தெளிவு காட்சி யாயிற்று, மற்று ஆண்டு — பின் அவ் வுபதேச வுரையில், கண்ணன் யான் யார் உள்ளத்தும் சிவனுவல் என்று கூறலின் — அக் கண்ணபிரான் யானே யாவருள்ளத்தும் பொருந்தியுறைவன் என்று சொல்லுதலின், அனையனுக்குக் கவர்த்து ஒரு ஆசங்கை குறுகியது — அவ்வருச்சுனனுக்கு இருதலைப் பட்டு ஒரு ஐயவுணர்வு உளதாயிற்று. (எ—று)

பரமுத்திப் பெரும்பயன் தலைப்பட வென்பது மேலுஞ் சென்றியையும், பெற்றத்தாற் பெற்ற பயன் என்புழிப் போல ஓதியதானு மென்புழி அன்சாரியையும், நீ யென்புழி எச்சவும்மையும் விகாரத்தாற் றொக்கன, கண்ணன் றன்னால் உபாசிக்கத் தகும் என்னும் மூன்றாவது கண்ணன் றனக்குபாசிக்கத் தகுமென நான்காவதனாற் றோன்றியது, "அதனாற் செயற்படற்



கொத்தகிளவியும் நான்க னுருபிற் றொன்னெறி மரபின தோன்ற லாறே." என்னும் விதி. மற்று வினைமாற்றின் கண் வந்தது. தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது, எஞ்சாப் பொருட்டாகும் யாவர் என்னும் பெயர் ஆறென மரீஇயிற்று. கேட்பிக்கும் அம்ம வென்னு மிடைச்சொல் ஈறு திரிந்து நின்றது.

கண்ணபிரான் மேலை வீட்டின்பம் எய்தற்பொருட்டு ஆதியான பரமபுருடனை யான் சரண் அடைகின்றேன், அருச்சுனனே நீயும் அவ் வீட்டின்பம் எய்தற் பொருட்டு அவ் வீசனைச் சரணடைக என்று ஓதிப், பின்னர் தானே எல்லா ருளத்திலும் கலந்துறையும் பரம்பொருளென்று மாறுறக் கூறுதலின், அருச்சுனனுக்குக் கீதையில் ஐயப்பாடு நிகழ்தற்கு இடனுளதாயிற் றென்க.(11, 12).

### வேறு

இவ்வாற்றான் மருளிவன்கட் டோன்றியதங்
கையத்தா னெனினு மாக
அவ்வாறன் றேற்றிரிபா லாயினுமா
குகவின்னு மதனை வாங்கிச்
செவ்வாற்று வியானுரைப்ப தேவன்கோளன்மற்
றிவனென்று செப்பு முண்மை
தெவ்வாற்று தொழிந்தனமயக் கண்ணனே
யுரைத்தமையாற் றெளிக நன்றே.

இது மேலதனை வலியுறுத்துகின்றது.

(இ—ள்) அங்கு இவ்வாற்றால் இவன்கண் மருள் தோன்றியது — கீதார்த்தவுபதேசத்தில் இந்நெறியால் இவ்வருச்சுனனுக்கு மயக்க வுணர்வு தோன்றிற்று. ஐயத்தா னெனினும் ஆக — அம்மயக்க வுணர்வு, ஐயவுணர்ச்சியினால் ஆயதெனினும் ஆகுக, அவ்வாறு அன்றேல் திரிபால் ஆயினும் ஆகுக — அங்ஙனமன்றி விபரீத வுணர்ச்சியினால் ஆய தெனினும் ஆகுக, இவன் — இப்பெற்றியனாகிய அருச்சுனன், இன்னும் செவ்வாற்றால் யான் உரைப்பது கொளல் எவன் என்று — மேலும் செந்நெறியால் யான் உபதேசிக்கும் அப்பொருளைக் கொள்கிற்பது எங்ஙன மென்று, கண்ணனே உரைத்தமையால் — கண்ணபிரான் அனுகீதாரம்பத்திற் கூறியது கொண்டே, செப்பும் உண்மை தெவு ஆற்றாது ஒழிந்தமை — அவன் கீதையுட் கூறிப்போந்த வுண்மையை அருச்சுனன் கொள்ளாது விட்டா னென்பது, நன்கு தெளிவு ஆம் — பெரிது தேற்றமாம். (எ—று).

அம்மயக்க வுணர்வென்பது அவாய் நிலையான் வருவிக்கப்பட்டது. தான், மற்று அசைநிலை. எவன் வினை வினைக் குறிப்பு முற்று. தெவு தெவ்வென ஈறுதிரிந்து நின்றது. அது கொள்ளுதற் பொருட்டாதல் "தெவுக் கொளற்பொருட்டே" என்னுஞ் சூத்திரத்தா னறிக. "நன்று பெரிதாகும்" ஏகாரம் ஈற்றசை, தேற்றேகாரம் பிரித்துக்கூட்டி யுரைக்கப்பட்டது.

யான் கீதையில் அறிவுறுத்திய தத்துவத்தினை இரட்டுறக் கொண்டாகத் திரிபுறக் கொண்டாக அருச்சுனன் மெய்யுணர்ந்திலன். இப் பெற்றியான் யான் அதனை மீட்டும் கொளுத்த வுறினும் மனம் பற்றிக் கோடல் யாங்ஙன மென்று, கண்ணபிரான் அனுகீதாரம்பத்திற் புலந்து உசாவுற்றுரைத்துக் கொண்டே, ஆண்டு



ஐயப்பாடு அவற்கு அங்ஙனம் உளதாய தென்பது தெற்றெனத் துணியப்படுமென்க. (13)

யோகத்தி லேறியமெய்ச் சிந்தையினிற்
கருச்சுனமுன் னுரைத்தேன் வாய்மை
மோகத்தை யடைந்துவெளிக் காட்சியிப்போழ்
துடையன்யான் மோக நீத்துப்
போகத்தேர்ந் துண்மைநிலை புகலும்வலி
யிலனென்று புகன்று கண்ணன்
ஏகச்சந் தேகத்தோ டேதிரிபா
யுரையினவற் றெருட்டி யிட்டான்.

இது கண்ணபிரான் அருச்சுனனுக்கு அனுகீதை கூறியவாறு இது வென்கின்றது.

(இ—ள்) அருச்சுன — அருச்சுனா, முன் யான் யோகத்தில் ஏறிய மெய்ச்சிந்தையின் நிற்கு வாய்மை உரைத்தேன் — நான் அக்காலத்துச் சோகம் பாவனையி னெய்திய மெய்யுணர்வினால் உனக்கு உண்மைகண்டு கூறினேன், இப்போழ்து மோகத்தை அடைந்து வெளிக் காட்சி உடையன் — இக்காலத்து அம் மெய்யுணர்வு நீங்கிப் புறவிந்திரியக் காட்சி யுடைய னாயினேன், நிற்கு மோகம் போக — ஆகலின் உனக்கு ஐயம் நீங்கித் தெளிவுண்டாக, உண்மைநிலை தேர்ந்து புகலும் வலியிலன் என்று கண்ணன் புகன்று — பொருளின் உண்மை நிலை தெளிந்து உரைக்கும் வன்மை யுடைய னல்லே னென்று கண்ணபிரான் கூறி, சந்தேகத்தோடு திரிபு ஏக — ஐய வுணர்வோடு விபரீத வுணர்வு நீங்க, ஆய் உரையின்

அவற் றெருட்டி யிட்டான் — நுட்ப வுரையினுல் அவ்வருச்சுனனைத் தெளிவித்தான். (எ—று).

சிந்தை ஆகுபெயர். கண்டு சொல்லெச்சம். மோகம் ஈண்டு ஐய வுணர்வின் மேற்று. ஆய் — நுட்பம். அது "ஒய்த லாய்த னிழத்தல் சாஅ, வாவயி னுன்கு முள்ளத னுணுக்கம்" என்னுஞ் சூத்திரத்தா னறிக. தெருட்டி யிட்டான் ஒரு சொன்னீர்மைத்து.

கண்ணபிரான், அருச்சுன! உனக்கு நான் அன்று மெய்யுணர்வால் நன்று உபதேசித்த தத்துவத்தினை இன்று பொய்யுணர்வினுல் நன்றுரைப்ப தெங்ஙனம் என்று கூறி, உரைத்திறத்தினுல் அவனுக்கு அதன்கண் ஐயம் ஒழித்தா னென்க. (14)

தனஞ்சயன்மாட் டுளநண்பு கருதிக் கண்ணன்
சங்தேக விபரீத முழுது நீங்கி
மனங்கோளவன் ஞேன்வாய்மை யுறுகவென்று
மதித்துமனம் வாக்கிறந்த மாண்பிற் ருகிச்
சினங்கடிந்து சாந்தியுறு விக்குமது தன்னைச்
செல்காலத் தொருசித்தன் காசிபனுக் குரைத்த
முனம்படுநற் கதையினினி தெளிதுரைத்தன் னவற்கு
மோகமற முதன்ஞானம் பெருக்கி ஞனே.

இது கண்ணபிரான் அனுகீதையில் அருச்சுனற்கு அறிவு கொளுத்தியவாறு கூறுகின்றது.



(இ—ள்) கண்ணன் — கண்ணபிரான், தனஞ்சயன் மாட்டு உள நண்பு கருதி — தனஞ்சயனிடத்துத் தனக் குளதாகிய நட்பினை யெண்ணி, அன்னேன் — அவன், சந்தேக விபரீதம் முழுதும் நீங்கி — ஐயந் திரிபு முற்ற வகன்று, மனங்கொள வாய்மை யுறுக வென்று மதித்து— மனம்பற்றி மெய்யுணர்வு தலைப்படுக வென்று எண்ணி, மனம் வாக்கு இறந்த மாண்பிற்று ஆகி — மனவாசகங் கடந்த மாட்சியினையுடையதாய், சினம் கடிந்து சாந்தி யுறுவிக்கும் அது தன்னை — வெகுளியை வீட்டிச் சாந்தியை மிகுவிக்கின்ற அவ்வுபதேசத்தினை, செல் காலத்து ஒரு சித்தன் காசிபனுக்கு உரைத்த முனம்கொள் கதையால் — சென்ற காலத்தில் சித்தன் ஒருவன் காசிப முனிவனுக்குக் கூறிய குறிப்புப் பொருளைப் பொருந்திய சரித்திரத்தினுல், அன்னவற்கு இனிது உரைத்து — அவனுக்கு இனிது சொல்லி, மோகம் அற முதல் ஞானம் பெருக்கினுன் — சந்தேக விபரீதம் நீங்க முதன் ஞானத் தைப் பெருகச்செய்தான் (எ—று).

கண்ணன் கருதி உறுகவென்று மதித்து அது தன்னைக் கதையால் உரைத்து மூதன் ஞானம் பெருக் கினுன் எனக் கூட்டுக.

முன்னம் – குறிப்பு: அது முனம் என விகாரம் ஆயிற்று. முதன் ஞானம் எனினும் அடி ஞானம் எனி னும் ஒக்கும். ஏகாரம் ஈற்றசை.

கண்ணபிரான் அருச்சுனன் மாட்டுளதாய நண்பு காரணமாகக் கீதையில் அவன் ஐயுற்ற பொருளைத் தான் கேட்ட கதை யொன்றினுல் விளங்க உரைத்துத் தெளி வித்தான் என்க. (15)

## வேறு

அருச்சுனற்கு மனவுறுதி யெய்தவோ
ரிதிகாச மதனைக் கண்ணன்
கருத்ததனிற் புந்திமனந் தமைப்பனவ
தம்பதிபோற் கற்பித் தேநற்
குருத்தனக்குஞ் சீடனுக்கு நிகழ்வதோர்
சம்வாதக் கோள்கை யாலே
விரித்துவெளிப் படுத்துரைத்தா னதனையருட்
பெருங்கடலே விமல மூர்த்தீ.

இது கண்ணபிரான் அருச்சுனனுக்கு அநுகீதார்த்தம் உபதேசித்தவாறு தொகுத்துக் கூறுகின்றது.

(இ—ள்) அருட் பெருங் கடலே விமல மூர்த்தி — அருட்பெருங் கடலே! தூய திருமேனியோய்! கண்ணன் — கண்ணபிரான், அருச்சுனற்கு மன உறுதி எய்த — அருச்சுனனுக்குக் கீதார்த்தத்தில் நிச்சய உணர்வு பிறக்கும் பொருட்டு, ஓர் இதிகாசம் அதனை — தான் ஓர்ந்த இதிகாசப்பொருளை. கருத்ததனின் — தன் மனத்திற் கருதி, புந்தி மனம் தமை — தன் புத்தி மனங்களை, பனவ தம்பதிபோற் கற்பித்து — பிராமண தம்பதியாகப் புனைந்து, நல் குரு தனக்கும் சீடனுக்கும் நிகழ்வது ஓர் சம்வாதக் கொள்கையால்—சற்குருவுக்கும் மாணாக்கனுக்கும் நிகழ்வதொரு சம்வாத முறையினால், அதனை — தான் கீதையிற் கூறிய உண்மைஞானத்தினை, விரித்து வெளிப்படுத்து உரைத்தான் — விரித்துப் புலப்படுத்து உரைத்தான். (எ—று).



ஓர் இதிகாசம் — வினைத் தொகை. கருதி என்பது ஆற்றலாற் கொள்ளப்பட்டது. அது பகுதிப் பொருள் விகுதி. ஏகாரம் இரண்டும் அசைநிலை. தகரம் சந்தம் நோக்கி வந்தது. கருத்ததனின் என வேண்டாது கூறியது; கண்ணபிரானுக்குச் சிவோகம் என்னும் உண்மைஞானம் இயல்பானன்றிச் சாதகச் செய்தியால் விளங்கியது என்பது அறிவித்தற்கு.

கண்ணபிரான் அருச்சுனன் உறுதி கடைப்பிடித்து உய்யத் தான் கேட்டு உணர்ந்த இதிகாசப் பொருளை மனத்து எண்ணித் தன் புந்தி மனங்களைத் தம்பதிகளாகக் கற்பித்துச் சம்வாத நெறியினால் அக் கீதார்த்த உண்மையை அவற்கு இனிது புலப்படுத்தினான் என்க.

(16)

பூதங்க ளெவையானீ யார்பரந்தா
னேதுவேற்குப் புகறி யென்ற
ஏதந்தீர் சீடனுக்குக் குரவனறி
வுறுத்தவுண்மைப் பிரம ஞான
வாதந்தீர் முத்திவர லாற்றைப்பார்த்தன்
மனங்கொள்ள வெடுத்துநன்கு வகுத்துச்சீடன்
போதஞ்சேர் குருயாரென் றவற்குநான்
குருசீடன் புந்தி யென்றான்.

## இதுவுமது

(இ—ள்) பூதங்கள் எவை—பூதங்கள்யாவை? யான் நீ யார் — யான் ஆர் நீயார், பரம் தான் எது — பரம் பொருள் தான் யாது, எற்கு புகறி என்ற—எனக்கு எடுத்துரை என்று வினவிய, ஏதம் தீர் சீடனுக்கு — குற்றம்

நீங்கிய மாணாக்கனுக்கு, குரவன் அறிவுறுத்த வாதம் தீர் உண்மைப் பிரமஞான முத்தி வரலாற்றை — குரவன் செவியறிவுறுத் தருளிய விவாதமற்ற பிரமதத்துவ ஞானோபதேசமாகிய முத்தி வரலாற்றினை, பார்த்தன் மனம் கொள்ள எடுத்து நன்கு வகுத்து — அருச்சுனன் மனம் பற்றி உணர எடுத்து நன்கு கண்ணபிரான் கூறி, போதம் சேர் குரு (யார்) சீடன் யார் என்றவற்கு—ஞானியாகிய குரவன் யாவன் சீடன் யாவன் என்று வினாவியவனுக்கு, நான் குரு புந்தி சீடன் என்றான் — அருச்சுன! நானே அக் குரவன் என் சித்தமே அச் சீடன் என்று அறிக என்று அவன் கூறினான். (எ—று)

யார் என்னும் வினாவினைக் குறிப்பு முற்று யான் என்பதனோடும் சீடன் என்பதனோடும் கூட்டியுரைக்கப் பட்டது. உண்மைப் பிரமஞானம் வாதந்தீர் பிரம ஞானம் என்க. வினை முதல் அவாய் நிலையான் வந்தது. வகுத்து — வகுக்க.

பொருளியல்பு தெரியவேண்டி மாணாக்கன் நிகழ்த்திய வினாக்களுக்கு ஆசிரியன் இறுத்த பிரமஞான வீட்டு நெறியினைக் கண்ணபிரான் அருச்சுனனுக்கு அறிவுறுத்தினானாக, அவன் ஆண்டு ஆசிரியன் மாணாக்கன் என்னப் பட்டார் யாவர் என்ன, நானும் மனமும் ஆசிரியனும் மாணாக்கனும் ஆவேம் என்று அறிக என்றான் என்க. (17)

## வேறு

தன்னுடைய நன்னெஞ்சின் நிறுத்தியிட்ட பிரம
சத்தியினா லிருதயத்திற் சார்ந்த கட்டுப்
பின்னமுறீஇ வீடெய்தப் பெற்றதுநன் குணர்ந்து
பிறங்காதி புருடனைத்தான் சரண மாகத்



துன்னுகின்றே னென்றதுமற் றதுவிளக்கற் பொருட் [டாஞ்
சோகம்பா வனையால்யா னுயிர்க டோறும்
மன்னுவனென் றதுகீதை யருத்த மிந்த
மரபினருச் சுனன்றெளிய வகுத்தான் கண்ணன்.

இது முடிந்தது முடித்தலாய் எழுந்து அனுகீதைக்குப் பயப்பாடு கூறுகின்றது.

(இ—ள்) கண்ணன் — கண்ணபிரான், தன் உடை நல் நெஞ்சில் நிறுத்தியிட்ட பிரமசத்தியினால் — தன்னுடைய தூய மனத்தின் கண்ணே நிறுத்திய பிரம பாவனையில் விளைந்த ஞானத்தினால், இருதயத்திற் சார்ந்த கட்டு — இருதயத்திற் பொருந்திய கிரந்தி, பின்னம் உறீஇ வீடு எய்தப் பெற்றது நன்கு உணர்ந்து— வேறு பட்டு வீடுறப் பெற்றதனை நன்கு தெளிந்து, பிறங்கு ஆதி புருடனைத் தான் சரணாக அடைகின்றேன் என்றது — விளங்குகின்ற ஆதிபுருடனைத் தான் சரணாக அடைகின்றேன் என்றது, அது விளக்கற் பொருட்டு ஆம் — அப்பேற்றினை அருச்சுனனுக்குப் புலப்படுத்தற் பொருட்டே யாகும், யான் உயிர்கள் தோறும் மன்னுவன் என்றது — யான் உயிர்கள் தோறும் பொருந்தியுறைவன் என்றது, சோகம் பாவனையால் — சோகம் பாவனை செய்துகொண்டே என்று, கீதை அருத்தம் — கீதையினது யதார்த்தத்தினை, இந்த மரபின் — இம் முறையானே, அருச்சுனன் தெளிய வகுத்தான் — அருச்சுனன் தெளியுமாறு அனுகீதையினால் வகுத்துக் கூறினான். (எ—று)

சத்தி — ஞானம். மற்று — அசை. பொருட்டாம் என்புழியும், பாவனையால் என்புழியும் தேற்றேகாரம் விகாரத்தால் தொக்கன.

சோகம் பாவனையின் எய்திய உண்மை ஞானத்தினனே இருதய பந்தம் விடப்பெற்றுச் சீவன் முத்தன் ஆனதைத் தெளிவிக்க வேண்டியே ஆதிபுருடனைச் சரணடைகின்றேன் என்றும், சோகம் பாவனை கொண்டே உயிர்கள் தோறும் பொருந்தி உறைகுவன் என்றும், கீதையில் உனக்குக் கூறினேன் என்று அருச்சுனனுக்கு அனுகீதையினுல் கண்ணபிரான் மலைவறுத்தான் என்க.

அற்றேல், மாபாரதத்தில் கண்ணன் நான் ஒரு தெய்வத்தினையும் உபாசித்தல் செய்கின்றிலன் என்றும், நீலகண்டனை ஞானியர் சேவியார் என்றும் கூறியது என்னையோ? எனின், அவ் ஆசங்கை ஒழித்தற் கன்றே வருஞ் செய்யுள் எழுந்தது என்பது.

### வேறு

நானொரு தேவை யுபாசிப்ப தின்று
லெனக்கண்ணன் நவின்றவா சகத்திற்
கானதாற் பரிய முதிட்டிரற் கன்பு
தன்னிடத் தாக்குமத் தனையே
ஈனமி லறிஞர் தேவனு நீல
கண்டனைச் சேவியா ரென்றல்
தானவ னுகும் ஞானியர் விடய
மல்வழிச் சுருதிபஃ றவறும்.



இது மேலனவற்றிற்குத் தாற்பரியங் கூறிச் சிவ பரத்துவம் வலியுறுத்துகின்றது.

(இ—ள்) கண்ணன் — கண்ணபிரான், நான் ஒரு தேவை உபாசிப்பது இன்று என நவின்ற வாசகத்திற்கு — யான் ஒரு தெய்வத்தினையும் உபாசித்தல் செய்கிலன் என்று தருமபுத்திரனுக்குக் கூறிய வசனத்திற்கு, ஆன தாற்பரியம் — பொருத்தமுடைத்தான கருத்து, உதிட்டிரற்குத் தன்னிடத்து அன்பு ஆக்கும் அத்தனையே — உதிட்டிரனுக்குத் தன்கட் பத்திவளரச் செய்யும் அத்தனையேயாம், ஈனம் இல் அறிஞர் தேவனும் நீலகண்டனை சேவியார் என்றல் — குற்றம் நீங்கிய ஞானிகள் மகா தேவனாகிய நீலகண்டனைச் சேவை செய்யார் என்றது, தான் அவனாகும் ஞானியர் விடயம் — சிவனுள் அடங்கி ஏகனாகப் பெற்ற ஞானிகள் விடயமாம், அல் வழிச் சுருதி பல் தவறும் — இவ்வாறு கொள்ளாத வழி அதர்வசிகை முதலிய சுருதிகள் எல்லாம் வீண் சொல்லாய் இழுக்குறும். (எ—று).

முற்றும்மை விகாரத்தால் தொக்கது. உபாசிப்பதென்பது அத்தொழிின்மேல் நின்றது. ஆல்—அசை.

உதிட்டிரனுக்குத் தன்கட் பத்தி மிகுவித்தல் வேண்டியும், சிவமேயாய சீவன் முத்தர்க்கு வேறாய் நின்று செயக்கடவ சேவை யில்லாமை பற்றியும் அங்ஙனம் கூறப்பட்டன; ஆகலின், அவை கொண்டு பரர் கருத்து நிரம்புமாறு இல்லை என்க. (19)

வேறு

சம்புவினுக் குரியமகத் துவத்தினையிவ் வாறு
தலைப்பெய்வோ னாகியருந் தோணிமார்க் கத்தில்
அம்புவியி னடக்குமவர் தங்கள்சிகா மணியாய்
அரியினவ தாரனா யாரியனாய்ச் சிறந்த
உம்பர்புகழ் பாரதமா மிதிகாச மொழிந்த
சௌரியாம்வி யாதனையு முவனுயிர்ச்சான் றாகும்
செம்பவளச் சடைக்காட்டி லம்புலிவைத் தோம்புஞ்
சிவபெருமான் றனையுமியாஞ் சிரசின்வணங் குதுமே.

இது மாபாரதம் ஓதிய வியாச முனிவருக்கும் அவருக்கு அறிவு விளக்கஞ் செய்யும் சிவபிரானுக்கும் வணக்கம் கூறுகின்றது.

(இ—ள்) சம்புவினுக்குரிய மகத்துவத்தினை இவ்வாறு தலைப்பெய்வோனாகி — சம்புவாகிய சிவபிரானுடைய மகிமையை இங்ஙனம் சுருதியில் முகந்து நன்கு பெய்பவராகி, அருந் தொனிமார்க்கத்தில் அம்புவில் நடக்கும்வர் தங்கள் சிகாமணியாய் — அரிய தொனிப்பொருள் நடவையில் அழகிய புடவியிலே நடக்கும் புலவர் சிகாமணியாகி, அரியின் அவதாரனாய் — அரியின் அவதார விசேடராய், ஆரியனாய்—பூசிக்கப்படுபவராகி, சிறந்த உம்பர்புகழ் பாரதம் ஆம் இதிகாசம் மொழிந்த சௌரியாம் வியாதனையும் — சிறந்த உம்பரும் புகழப்படும் மாபாரதமாகிய இதிகாசத்தினைக் கூடிய சதுரப்பாடுடையராகிய வியாச முனிவரையும், உவன் உயிர்ச்சான்று ஆகும் — உவர் உயிர்ச்சான்றெனப்படும் அந்தரியாமியாய் விளங்கும், செம்பவளச் சடைக்காட்டில் — செம்பவளம் போலும் சடையாகிய அடவியில், அம்புலி



வைத்து ஓம்பும் — அம்புலியை இருத்திப் புரக்கும், சிவபிரான் தனையும் — சிவபிரானையும், யாம் சிரசின் வணங்குதும் — யாம் தலையினால் வணங்குவோம். (எ—று).

தலைப் பெய்வோன் — ஒரு சொன்னீர்மைத்து. உம்பரும் என்னும் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

சிவபரத்துவம் வெளிப்பட நமக்கு உறுதிதரும் மாபாரதம் ஓதிய வியாச முனிவரையும், அவர் அது செய்யுமாறு பிரேரித்து நின்ற அந்தரியாமியாகிய சிவபிரானையும் வணங்குவாம் என்க.

பாரத தாற்பரிய சங்கிரகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

## செய்யுள் முதற் குறிப்பகராதி.



ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ அப்ப தீக்ஷிதர்

வடமொழியில் செய்தருளிய

# பாரத தாற்பரிய சங்கிரகம்.



॥ श्रीः ॥

# ॥ श्रीभारतसारसंग्रहस्तोत्रम् ॥

श्रीबादरायणमुनिः स्वयमेव विष्णुः
पार्थच्छलात्तमधिकृत्य कृते प्रबन्धे ।
तस्यापि नित्यमहितं शशिभूषणत्वा-
माम्रेडयन्गुरुरदर्शयदादि तत्त्वम् ॥ ॥ १ ॥

मोहाभिभूतमखिलं जगदाविरिञ्चं
त्वामेकमेव भगवन्नहितं च तेन ।
विज्ञाप्य मङ्कणकदिव्यकथानुषक्तया
त्वां ब्रह्म तेन च मुनिः स्फुटयांबभूव ॥ ॥ २ ॥

तस्माच्च मोहतदभावकृताद्विशेषा-
ज्जन्मस्थितिप्रलयभागखिलं त्वदन्यत् ।
तत्कर्तृ वस्तु परमं त्वमिति प्रबोधं
जातं विभावयति तस्य तदीयवाचा ॥ ॥ ३ ॥

कैलासशैलशिखरे हरिपार्थदृष्टं
त्वां ब्रह्म नाथ परमं समुदीर्य साक्षात्
तल्लक्षणं स्वयमनन्यतदीयधर्म-
क्रान्ते कियच्च भवति स्फुटमाचचक्षे ॥ ॥ ४ ॥

नारायणस्य सुचिरं त्वदुपासकस्य
यद्ब्रह्मभावमवदत्तव भावनाप्तम् ।
यत्ते स्तुतिं तदुदितां परभावगर्भां
त्वां ब्रह्म तेन च मुनिः स्फुटयांचकार ॥ ॥ ५ ॥

मूलं कृष्णो ब्रह्म च ब्राह्मणार्थे-
त्यादावेवं ब्रह्मभावं महेश ।
पार्थानां ते नित्यसंरक्षकस्य
व्यासस्तत्रोद्घाटयामास शंभो ॥ ॥ ६ ॥

ब्रह्मा विष्णुः शंकरश्चेति देवाः
कर्तारो ये सर्गरक्षालयानाम् ।
तेषां सृष्टिं संहृतिं च त्वदिच्छा-
धीनामूचे द्योतयन्ब्रह्मतत्त्वम् ॥ ॥ ७ ॥

विशालाक्षः स्थाणुर्द्रुहिणतनयः संहरणकृ-
त्सरोजाक्षक्रोधप्रभव इति वैशेषिकपदम् ।
विभूतित्वज्ञप्त्यै किमपि निहितं नाथ नियतं
निकर्षोक्तिस्ताभ्यां भवत इति बुद्धिं निरसितुम् ॥८॥



यत्रेदृशं नास्ति विभूतिरुद्रता-
विज्ञापकं नाथ विशेषकं पदम् ।
सापि स्वधर्मग्रहमानवैशसा-
त्सर्वेश्वरं त्वां न निकर्षगीः स्पृशेत् ॥ ॥ ९ ॥

गीतासु गूढमुदितं भवतः परत्वं
नैव स्फुटं तदत एव हि सव्यसाची ।
गीतार्थमेव सहसा पुनरप्यपृच्छ-
त्तद्बोधनार्थमुदिता हरिणानुगीता ॥ ॥ १० ॥

तमेव चाद्यं पुरुषं प्रपद्य इ-
त्युदीरितं यन्मधुकैटभद्विषा ।
तमेव सर्वान्भ्रमयन्तमीश्वरं
महाफलाप्त्यै शरणं व्रजेति यत् ॥ ॥ ११ ॥

एतेन कृष्णस्य समं मुमुक्षुणा
स्वाराधनीयः प्रतिभासते परः ।
सर्वस्य चाहं हृदि संनिविष्ट इ-
त्याद्यैस्तु विष्णुस्तदुदेति संशयः ॥ ॥ १२ ॥

इत्थमस्य यदि संशयो भवे-
दन्यथाग्रहणमेव वा पुनः ।
नाग्रहीन्मदुपदिष्ट एष इ-
त्यग्रहं हरिरवोचदुत्तरे ॥ ॥ १३ ॥

उक्त्वा च संशयविपर्ययर्ययोर्निरासं
चक्रे हरिश्चतुरया द्रुतमुक्तिभङ्ग्या ।
शक्यं तदद्य न मया भणितुं यथोक्तं
योगाधिरूढमनसा नचहिर्दशेति ॥ ॥ १४ ॥

अधुना तदुपास्यसंशया-
द्यपगच्छत्विति सौहृदं स्मरन् ।
इति होक्तमिह श्रुतं मये-
त्युपदेश्ये कियदाह तत्र सः ॥ ॥ १५ ॥

तस्य स्थिरीकरणमात्मनि पूर्ववृत्तं
स्वस्यैव बुद्धिमनसी द्विजदम्पती च ।
कृत्वानुयोजनतदुत्तरयोरनुक्त्वा
विख्याप्य तद्विवरणं च चकार शौरिः ॥ १६ ॥



अग्रे तत्त्वं परं किं
त्वहमपि च कुतः सर्वभूतानि चेति
प्रश्ने शिष्यस्य तस्मै
गुरुकृतमखिलं ब्रह्मतत्त्वोपदेशम् ।
मोक्षं शिष्यस्य चोक्त्वा
पुनरपि विजयेनानुयुक्तो गुरुः कः
शिष्यो वेति स्वमेवे-
श्वर गुरुमवदत्स्वस्य चित्तं स्वशिष्यम् ॥ १७ ॥

ब्रह्मण्येवं स्वचेतोनियमनसमुप-
स्थापितं ग्रन्थिमोक्षं
स्वेनैवोक्तं विमृश्य प्रपदनवचनं
तत्प्रतीतार्थनिष्ठम् ।
यत्तत्सर्वस्य चाहंहृदिमुखवचनं
तत्पुनः शास्त्रदृष्ट्ये-
त्येवं पार्थोऽवगच्छेदितिविवृतिरका-
र्यत्र गीताशयस्य ॥ ॥ १८ ॥

तच्च ब्रह्म प्रपत्त्यास्पदमसुररिपो-
रीश्वरस्त्वं न चान्यो
नाहं कंचित्प्रपद्ये विबुधमिति वचः
श्रोतुरुत्कृष्टभक्त्यै ।
सेवन्ते नीलकण्ठं परिमितफलदं
न प्रबुद्धा इतीदं
ब्रह्मैक्यध्यातृविद्वद्विषयमितरथा
नास्ति भूयोऽनुरोधः ॥ ॥ १९ ॥

इत्थं चक्रे भारतं यः प्रबन्धं
व्यक्त्या व्यासः शांभवोत्कर्षवर्षो ।
धन्यधन्यधन्य मूर्धन्यधन्य-
स्तं शौरिं तत्साक्षिणं चानतोऽस्मि ॥ ॥ २० ॥

इति श्रीभारद्वाजकुलजलधिकौस्तुभश्रीमदद्वैतविद्याचार्य-
श्रीविश्वजिद्याजिश्रीरङ्गराजाध्वरिवरसूनो-
रप्पयदीक्षितस्य कृतिः

श्रीभारतसारसंग्रहस्तोत्रविवरणं
समाप्तम् ।

---

உ

சிவமயம்.

## திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து ஞானதேசிகர்கள்.

---

1. ஸ்ரீ நமச்சிவாய தேசிகர்.
2. ,, மறைஞான தேசிகர்.
3. ,, அம்பலவாண தேசிகர்.
4. ,, உருத்திரகோடி தேசிகர்.
5. ,, வேலப்ப தேசிகர்.
6. ,, குமாரசுவாமி தேசிகர்.
7. ,, பிற்குமாரசுவாமி தேசிகர்.
8. ,, மாசிலாமணி தேசிகர்.
9. ,, இராமலிங்க தேசிகர்.
10. ,, வேலப்ப தேசிகர்.
11. ,, பின் வேலப்ப தேசிகர்.
12. ,, திருச்சிற்றம்பல தேசிகர்.
13. ,, அம்பலவாண தேசிகர்.
14. ,, சுப்பிரமணிய தேசிகர்.
15. ,, அம்பலவாண தேசிகர்.
16. ,, சுப்பிரமணிய தேசிகர்.
17. ,, அம்பலவாண தேசிகர்.
18. ,, சுப்பிரமணிய தேசிகர்.
19. ,, வைத்தியலிங்க தேசிகர்.
20. ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள்.

உ

சிவமயம்.

## ஆதீன வெளியீடுகள்.

---

1. முத்தி பஞ்சாக்கர மாலை.
   பஞ்சாக்கர தேசிகர் மாலை.
   பதவுரைகளுடன். (இரண்டாம் பதிப்பு)
2. ஞான பூஜா விதி. (பழையவுரையுடன்)
3. நல்லூர் மாசி மகோற்சவ வைபவம்.
   (இரண்டாம் பதிப்பு)
4. மண்ணிப்படிக்கரை ஸ்தல மகாத்மியம்.
5. திருவிடைமருதூர்க் காருண்யாமிர்த
   தீர்த்த மகிமை, புஷ்யதீர்த்த மகிமை.
   (இரண்டாம் பதிப்பு)
6. இராமாயண தாற்பரிய சங்கிரகம்.
   (உரைகளுடன்)
7. ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் மீது
   தோத்திரப்பா. (உரையுடன்) I
8. சிவஞான போதம் (சூத்திரமூலமும்–உரையும்)
9. சித்தாந்த மரபு, சித்தாந்த மரபு கண்டனம்,
   சித்தாந்த மரபு கண்டன கண்டனம்.
   (குறிப்புரையுடன்)
10. ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி மும்மணிக்கோவை.
11. திருநெல்வேலித் தேவாரப் பதிகம்.
    (உரையுடன்)
12. ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் மீது
    தோத்திரப்பா. (உரையுடன்) II.
13. சைவ சமயம்.
14. பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி. (உரையுடன்)
15. சித்தாந்தப் பிரகாசிகை. (குறிப்புடன்)
16. சுதந்திரத் திருநாள்.
17. கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடுதூது.
    (உரையுடன்) டாக்டர். ஸ்ரீ உ. வே. சா.
18. திருச்செந்தூர்—கடற்கரை முருகன் கோயில்.
    (ஆங்கிலம்)
19. ஞான சூடாமணி.
20. சிவஞான போதச் சிற்றுரை. (அச்சில்)
    ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்.
21. சுவாமிநாத தேசிகர் பிரபந்தத் திரட்டு.
    (அச்சில்)
22. பூப்பிள்ளை அட்டவணை, ஸ்ரீ பஞ்சாக்கர
    சிந்தனை, ஞானபூசா விதி. (வசனம்)
23. சதமணிக் கோவை —
    பழைய பொழிப்புரையுடன்.
24. திருவள்ளுவ நாயனாரும், பெரிய புராணமும்.
    (ஆராய்ச்சி)
25. சமயம். (ஸ்ரீ சபாபதி நாவலர்)
26. திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம்.
    (குறிப்புரையுடன்)
27. அத்துவித வாக்கியத் தெளிவுரை.
28. சிவஞான போதம். (வடமொழி தமிழ்மொழி
    சூத்திரம் பதவுரைகளுடன்)
29. திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ்.
    (குறிப்புரையுடன்)
30. சிவஞான சித்தியார் (ஆராய்ச்சி)
31. திருப்பள்ளியெழுச்சி பதவுரை.
32. முத்தி பஞ்சாக்கர மாலை, ஸ்ரீ நமச்சிவாய
    மூர்த்தி தாராட்டு, திருவாவடுதுறைத்
    தேசிக சோபனம் முதலியன.
33. ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் பிரபந்தங்
    கள் I. (குறிப்புரையுடன்)

உ

சிவமயம்.

விரைவில் வெளிவரச் சித்தமாயிருப்பன.

---

1. திருவாவடுதுறை யமகவந்தாதி. (பதவுரையுடன்)
2. தணிகைப் புராணவுரை.
3. திருவாவடுதுறைப் புராணம்.
4. திருவீழிமிழலைப் புராணம்.
5. சிவஞான போத சிந்தனை.
6. சிவஞான போத திராவிட மாபாடியம்.
7. இலக்கணக் கொத்து.
8. தொல்காப்பியப்பாயிரவிருத்தி முதற் சூத்திர விருத்திகள்.
9. இலக்கண விளக்கச் சூறாவளி.
10. ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் பிரபந்தங்கள். II. (குறிப்புரையுடன்)
11. கவிராக்ஷஸ— ஸ்ரீ கச்சியப்பமுனிவரர் பிரபந்தங்கள். (குறிப்புரையுடன்)
12. மதுரகவி — தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் பிரபந்தங்கள். (உரையுடன்)
13. சிவஞான போதம் பாண்டிப்பெருமாள் விருத்தி.

